

சிவானந்த குருகுல வெளியீடு 1

# முத்திராலட்சணம்

அச்சுவேலி,

சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள்



சிவானந்த குருகுலம், திருக்கேதீச்சரம்.

உ

சிவமயம்

# சிவானந்த குருகுலம்

## திருக்கேதீச்சரம்

அறிவும், ஒழுக்கமும், ஆற்றலும், இறை பக்தியும் நிறைந்த சைவக்குருமார்களை உருவாக்கத் திருக்கேதீச்சரத்தில் சிவானந்த குருகுலம் நிறுவப்பட்டுள்ளது. இங்குப் பயிற்சி பெறும் மாணவர்கள் சிவாகம முறைகளையும் சைவசமயத் தத்துவங்களையும் தமிழிலும் வடமொழியிலும் நன்கு கற்று, நித்திய நைமித்தியங்களையும், சைவக்கிரியைகளையும் சைவாலயங்களிலும், சைவஸ்தாபனங்களிலும் சிறந்த முறையில் நன்கு நடாத்தக்கூடியவராகப் பயிற்றப்படுவர்.

மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்றும் ஒருங்கே அமைந்து, திருமுறைகளால் போற்றப்பெற்று, புனிதமும் அமைதியும் நிறைந்த சூழலில், பழமை வாய்ந்து திகழும் திருக்கேதீச்சர ஆலயத்தின் நிழலில் இத்தகைய சமயக்கல்வி நிலையம் நிறுவப்படுவது மிகப் பொருத்தமானதெனச் சைவ உலகம் ஏற்றுக்கொள்ளும். அன்றியும் அருளூற்றுடைய ஓர் புராதன சிவாலயத்தில் நடைபெறும் சிவாகம முறைகளை அவதானித்தும் அவ்வப்போது வேண்டிய சேவைகளில் தங்களால் இயன்ற அளவு பங்குபற்றியும் அனுபவம் பெறும் வாய்ப்பும் மாணவர்களுக்குக் கிடைக்கும்.

சிவானந்த குருகுலத்திற்கென அழகான கட்டிடம் ஒன்று நிறுவப்பட்டுள்ளது. மாணவர்கள் தங்கியிருப்பதற்கும், படிப்பதற்கும் வசதியான படுக்கை அறைகளும், வகுப்பறைகளும் அங்கு உள. தற்போதைய ஒழுங்கின்படி மாணவர்களுக்கு இலவசமாகக் கல்வி, உணவு, உடை என்பன வழங்குவதற்கு வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

சிவானந்த குருகுலம் 1961-ம் ஆண்டு கார்த்திகைத் திங்களில் தொடங்கப் பெற்றுச் சிறந்தமுறையில் நடைபெற்று வருவதை ஈழத்துச் சைவப் பெரு




உ

சிவமயம்

# பதிப்புரை

சிவானந்த குருகுலம் தோன்றிய நோக்கங்கள் நிறைவேறவும் மாணவர்களின் பொது அறிவு வளரவும் சிவானந்த குருகுலத்திற்குத் தொடர்பான பல பாடப் புத்தகங்கள் வேண்டப் படுகின்றன. தமிழ் சிவானந்த குருகுலத்தின் போதனு மொழியாகும். எனவே பெரும்பாலான நூல்கள் தமிழில் வெளிவரும். பாடத்திட்டத்தின்படி வடமொழி கட்டாய பாடமாக இடம் பெறுகின்றதால், சைவாகமக் கிரியைகளை அம்மொழியில் நடாத்துவதற்கு வடமொழியிலும் நூல்கள் வெளிவரும்.

புராதன ரிஷிகளும் பிற்காலத்தில் தோன்றிய நாயன்மார்களும், ஆசாரியார்களும் வகுத்துச் சென்ற சமய தத்துவங்களையும், வாழ்க்கை முறைகளையும் சிறப்பாகக் குருகுலமாணவர்களும், பொதுவாக நம் நாட்டுச் சைவ இளைஞர்களும் அறிந்து உணர்ந்து வாழவேண்டுமென்பதே குருகுல வெளியீடுகளின் நோக்கமாகும். எனவே குருகுல வெளியீடுகள் பண்டைக் காலந் தொட்டு வழிவழியாக வகுக்கப்பட்ட உயர்ந்த இலட்சியங்களையும் கருத்துக்களையும் சைவ இளைஞர்கள் அறிந்து தற்காலத்திற்கு ஏற்ற முறையில் ஒழுகுதற்கும், சமய அடிப்படை உண்மைகளுக்குப் பொருந்தாத மாற்றங்களில் தடுமாருது இருப்பதற்கும் பெரிதும் பயன்படுமென நம்புகின்றோம்.

சிவானந்த குருகுலத்தின் வெளியீடாகப் பத்து நூல்களை முதலில் வெளியிட எண்ணியுள்ளோம். அவை சிவானந்த குரு குலத்தின் பாடவிதானத்திற்கு அமைந்தனவாய், உடனே தேவைப்படும் பாடப்புத்தகங்களாக இருக்கும். இந்த நூல்கள் குருகுலமாணவர்களுக்குப் பயன்படுவதோடு, சைவாலயங்களில் பூசை செய்யும் குருமார்களுக்கும் சைவசமய உண்மைகளில் கருத்துடையோர்க்கும் பெரிதும் உதவுமென எதிர்பார்க்கின்றோம். குறித்த நூல்கள் வேண்டியபொருளை உள்ளடக்கிச் சிறிய அளவில் பலரும் வாங்கி வாசிக்கக்கூடிய விலையில் வெளிவரவேண்டும் என்பதே நமது பெருவிருப்பு.

நம்மிடையே சமய அறிவும், ஆற்றலும் நிறைந்து எல்லோரா லும் ஏற்றுக் கொள்ளப்பட்ட சமயநூல் ஆசிரியராய் அச்சுவேலி சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள் விளங்குகின்றார்கள். அன்னார் முதல் இருநூல்களைக் குருகுல வெளியீட்டிற்கு எழுதி உதவி யுள்ளார்கள். அவை

1. முத்திரா லட்சணம்

2. சிவபூசை விளக்கம்.

இவைகளுள் குருகுலத்தின் முதல் வெளியீடாக 'முத்திரா லட்சணம்" வெளிவருகின்றது. இந்த அரிய நூலைப் படித்து அதில் கூறப்பெற்றுள்ள முறைப்படி ஆலயங்களில் கிரியை களைச் சைவக் குருமார்கள் செய்வார்களேயானால், கோயில் களுக்குச் சென்று வணங்கும் பல்லாயிரக்கணக்கான மக்கள் அம் முத்திரைகளின் உட்பொருளை விளங்கிச் சமயத்துறையில் விளிப்புணர்ச்சி பெற்று மகிழ்வார்களென்பது திண்ணம்

கொட்டில்,
திருக்கேதீச்சரம்.
சார்வரி புரட்டாதி
விஜயதசமி
(8-10-62)

கந்தையா வைத்தியநாதன்
முகாமையாளர்,
சிவானந்த குருகுலம்.

---

உ

சிவமயம்

# முகவுரை

சிவபெருமான் திருவடியை அடைதற்குரிய சைவநன்னெறிகள் தாசமார்க்கம் புத்திரமார்க்கம் சகமார்க்கம் சன்மார்க்கமென நான்கு வகைப்படும். அவை முறையே சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் பெயர் பெறும். அவற்றுட் கிரியையாவது தூபம் தீபம் நைவேத்தியம் முதலிய உபசாரங்களோடு செய்யப்படுவதாம். இவற்றைத் தசோபசாரம் சோடசோபசாரம் முதலியனவாகச் சைவாகமங்கள் செப்பும். இவ்வகை உபசாரங்களை இறைவனிடம் ஒப்பித்தற்கு மந்திரமும் முத்திரையும் வேண்டப்படும். அவைகளும் இறைவனருளிய சிவாகமங்களிற்றானே சொல்லப்பட்டன. அச்சிவாகமங்களில் முத்திராலக்ஷண விதி கூறும் படலங்களுமுள்ளன. இவ்வாறு சிவாகமங்களிலும் அவற்றின் வழிவந்த பத்ததிகளிலும் சொல்லப்பட்ட முத்திரைகள் பலவற்றுள்ளும் சிவபூசை சந்தியாவந்தனம் முதலியவற்றுக்கு அவசியம் வேண்டப்படும் முத்திரைகள் சிலவற்றின் இலக்கணங்களைக் கூறுவது முத்திராலட்சணமென்னும் இந்நூல். இதனை மொழிபெயர்த்துத் தமிழில் இயற்றிய மகோபகாரியின் பெயர் முதலியன தெரியவில்லை. இவர் சிவாகமங்களில் வல்லவரென்பதும் தமிழறிஞர் என்பதும் மாத்திரம் இந்நூலால் தெளிவாகின்றன.

முத்திராலட்சணம் என்னும் அரியநூல் சைவப்பெரியார் ஸ்ரீமாந் த. கைலாசபிள்ளை அவர்களாலும் வேறு சிலராலும் அச்சிடப்பட்டு வெளிவந்தது. அப்பதிப்புக்களை வைத்துச் செப்பஞ் செய்து, திருக்கேதீச்சரம் தலைவர் சேர் கந்தையா வைத்தியநாதன் அவர்கள் விரும்பியவாறு புதிதாக உரையுமெழுதி அவர்களிடம் ஒப்பித்தேன். இவ்வுரையில் மூலத்திற் கூறப்பெறாத சில முத்திரைகளின் இலக்கணங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இம் முத்திராலட்சணம் அதற்கு நாமெழுதிய முத்திரையுடன் திருக்கேதீச்சரக்குருகுலவெளியீடாக இப்பொழுது வெளிவருகின்றது. எம்மால் முன்

னர் எழுதப்பட்டு 1928-ம் ஆண்டு முதற்பதிப்பாக வெளிவந்த சிவபூசை விளக்கம் என்னும் நூல் குருகுலத்து இரண்டாவது பிரசுரமாக விரைவில் வெளிபாகும்.

கௌரியம்பா சமேத கேதீச்சரநாதன் திருவருள் முன்னிற்பதாக.

இங்ஙனம்

ச. குமாரசுவாமிக்குருக்கள்

உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்

# முத்திரலட்சணம்

## சிகாமுத்திரை.

கண்ணுத லுடைய கயமுக வண்ணலை
எண்ணிய கரும மினிது முற்றுறச்
சிந்தையி னினைந்து தியானம் பண்ணி
முந்து மிருகர முட்டியாப் பிடித்தே
சிரம்புடைத் திடுதல் சிகாமுத் திரையே

இதன் பொருள்:- எண்ணிய கருமம் இடையூறு நீங்கி இனிது முடிதற் பொருட்டு யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைத் தியானித்து இரு கரங்களையும் முட்டியாகப் பிடித்துக்கொண்டு சிரசிற் குட்டிவணங்குதல் **சிகாமுத்திரை** யாம் என்றவாறு.

இரண்டு கரங்களையும் பெருவிரல்களுட்பட ஒன்றாகச் சேர்த்து மேனோக்கிப் பிடித்தல் முஷ்டியாம். **(1)**

## நமஸ்கார முத்திரை

பெருவிர லிரண்டும் பிணைந்திட நிமிர்ந்தே
கரமிரண் டுறினமக் காரமுத் திரையே.

இ-ள்:- பெருவிரல்கள் ஒன்றின் மேலொன்றாகப் பிணைய மற்றை விரல்களை நிமிர்த்திக் கரங்களிரண்டும் சேரச் சிரசில் அல்லது மார்பில் வைத்தல் நமஸ்கார முத்திரையாம் எ-று. **(2)**

## சண்முகமுத்திரை.

ஆக்கினை முதனடு வணிவிரல் செவிகண்
மூக்கினை மறைத்தல் சண்முக முத்திரையே.

இ-ள்:- பெருவிரல்களால் காதுத்துவாரங்களையும், நடுவிரல்களாற் கண்களையும், அணிவிரல்களால் மூக்குத்துவாரங்களையும் மூடுவது **சண்முக** முத்திரையாகும் எ-று. **(3)**

## கும்பமுத்திரை.

**மண்டுநீர் பிடித்த வலக்கை யிடக்கரங்**
**கொண்டுமேல் வளைப்பது கும்பமுத் திரையே.**

**இ-ள்:-** ஜலம் நிறைந்த வலக்கையை இடக்கையால் வளைத்துப் பிடிப்பது **கும்ப** முத்திரையாம் எ-று

இடக்கையின் மேலாக வலக்கையை வைத்து, இடப் பெருவிரலின்மீது வலப்பெருவிரலைச் சேர்த்து எஞ்சிய விரல் களால் மூடுவது கும்பமுத்திரையென்று வீராகமம் கூறும். இது கலசமுத்திரையெனவும் படும். (4)

## தேனுமுத்திரை.

**இருகை கூட்டி யிடையிடை கோத்த**
**விரல்களிற் றர்ச்சனி விரல்மத் திமைகளை**
**யார்த்திடக் கனிட்டை யநுமிகை களினுற்**
**சேர்த்துறப் பிடிப்பது தேனுமுத் திரையே.**

**இ-ள்:-** இருகரங்களையுஞ் சேர்த்து விரல்களை இடை யிடையாகக் கோத்தவிரல்களில் சுட்டுவிரல்கள் நடுவிரல்களை யும் சிறுவிரல்கள் அணிவிரல்களையும் நுனியோடு நுனிபொருந் தும்படி பசுவின் முலைக் காம்புபோல அழுத்திப் பிடிப்பது **தேனு**முத்திரையாம் எ-று.

வலக்கைச் சிறுவிரலால் இடக்கை அணிவிரலையும், இடக் கைச் சிறுவிரலால் வலக்கை அணிவிரலையும் வலநடுவிரலால் இடச் சுட்டுவிரலையும், வலச்சுட்டுவிரலால் இடநடு விரலையும் நுனியோடு நுனிபொருந்தச் சேர்க்க வேண்டுமென்பது கருத்து. இது சுரபி முத்திரையெனவும் அமிர்த முத்திரையெனவும் படும். (5)

## மகாமுத்திரை.

**நெடியகை யிணைகளை நிமிர்த்தெதிர் முகமுற**
**அடிமுதன் முடியள வமைக்கின்மா முத்திரை.**

**இ-ள்:-** இருகரங்களையும் விரித்து நிமிர்த்திப் பாதம் முதல் சிரசுவரையுங் காண்பிப்பது **மகா** முத்திரையாகும் எ-று. (6)

## அங்குசமுத்திரை.

**பிடித்தகை தர்ச்சனி பெருவிர லின்மிசை**
**யடுத்துற வளைத்திட லங்குச முத்திரை.**

இ-ள்:- வலக்கையை முட்டியாகப் பிடித்துப் பெருவிர லின்மீது சுட்டுவிரலைப் பொருந்தும் படிசெய்து வளைத்துப் பிடித்தல் **அங்குச** முத்திரையாம் எ-று. (7)

## விஸ்புரமுத்திரை.

**கருதிணைப் பெருவிரல் கனிட்டையே முதனுல்**
**விரனுனி தொடுவது விற்புர முத்திரை.**

இ-ள்:- இருகை விரல்களையும் இணைத்துப் பிடித்துப் பெருவிரல்களால் சிறுவிரல் முதல் நான்கு விரல் நுனிகளை யுந் தொடுவது **விஸ்புர** முத்திரையெனப்படும். (8)

## கோவிஷாண முத்திரை

**பிடித்தகை தர்ச்சனி பிறங்குமத் திமைதனை**
**விடுத்திடு வதுகோ விடாணமுத் திரையே.**

இ-ள்:- சுட்டு விரலையும் நடுவிரலையும் நீட்டிச் சிறுவிரல் அணிவிரல்களை மடக்கிப் பெருவிரலாற் பிடிப்பது **கோவி ஷாண** முத்திரை எனப்படும் எ-று. (9)

## திராசனி முத்திரை

**பிடித்திடு வலக்கையிற் பிறங்குதர்ச் சனிநிமிர்த்**
**திடக்கையி லடித்திடு மெனிற்றிரா சனியே.**

இ-ள்:- வலக்கைச் சுட்டு விரலை நீட்டி மற்றைய விரல் களை மடக்கிப் பிடித்துக் கொண்டு இடக்கையிலடிப்பது **திரா சனி** முத்திரையாம் எ-று. (10)

## ஆவாகன முத்திரை

**அஞ்சலி தன்னு ளணிவிர லிரண்டினும்**
**வீஞ்சிய வங்குட்ட மெய்திலா வாகனம்,**

இ-ள்:- அஞ்சலியாகப் பிடித்த இரு கரங்களின் அணி விரலடிகளில் பெருவிரல் நுனிபொருந்தப் பிடிப்பது **ஆவாகன** முத்திரையாம். இது பிரசன்ன முத்திரை யெனவும்படும். (11)

## ஸ்தாபன முத்திரை

**மேவு மஞ்சலி விரித்ததோ முகமுறத்**
**தாபனஞ் செய்வது தாபன முத்திரை.**

இ-ள்:- அஞ்சலியாகப் பிடித்த கரங்களை விரித்துக் கவிழ்ப்பது **தாபன** முத்திரையாகும் எ-று. (12)

## சன்னிதான முத்திரை

**பெருவிர லுயர்ந்திடப் பிடித்தகை முட்டிகள்**
**சருவுற விணைத்திடிற் சன்னிதா னமதாம்.**

இ-ள்:- முட்டியாகப் பிடித்த இரு கரங்களையும் இணைத்துப் பெருவிரல்களை நீட்டுவது **சன்னிதான**மாகும் எ-று (13)

## சன்னிரோதன முத்திரை

**அன்னசன் னிதானத் தகமுறப் பெருவிரல்**
**தன்னையுண் மடிப்பது சன்னிரோ தனமே.**

இ-ள்:- சன்னிதான முத்திரையில் உயர்ந்திருக்கும் பெருவிரல்களை மடித்து விரல்களினுள்ளே மறைப்பது **சன்னிரோதன** முத்திரையாம் எ-று (14)

## பத்மமுத்திரை.

**பணித்தகை விரித்துப் பெருவிர லிணைநடு**
**பணித்திடப் பிடிப்பது பதுமமுத் திரையே.**

இ-ள்:- பிணித்த கைகளை விரித்து இரு பெரு விரல்களையும் நடுவில் வளைத்துத் தாமரைப் போகுட்டுப் போலாகப் பிடித்து எட்டிதழ் போலாக மற்றைய விரல்களை வெவ்வேறுகச் சிறிது வளைப்பது பத்ம முத்திரையாம். எ-று (15)

## விம்பமுத்திரை.

பத்மமுத் திரைதரு பாணியி னடுவிரல்
விற்பொரத் தொடுவது விம்பமுத் திரையே.

இ-ள்:- பத்ம முத்திரையாகப் பிடித்த கைகளின் நடுவிரல்கள் விற்போல ஒன்றையொன்று வளைத்துத் தொடுவது **விம்ப** முத்திரையாம் எ-று. (16)

## சங்காரமுத்திரை.

அங்குலி நான்கு மங்குட் டத்தடி
தங்குற வளைப்பது சங்கார முத்திரையே.

இ-ள்:- வலக்கைப் பெருவிரலடியில் நான்குவிரல் நுனிகளும் தங்கும்படி வளைப்பது **சங்கார** முத்திரையாம் எ-று. (17)

## சோடிகாமுத்திரை.

பிடித்தகைத் தர்ச்சனி பெருவிர லின்னடுத்
துடித்திடத் தெறிப்பது சோடிகா முத்திரை.

இ-ள்:- சிறுவிரல் அணிவிரல் நடுவிரல்களை மடக்கிச் சுட்டுவிரலால் பெருவிரல் மத்தியில் விரல்துடிக்கத் தெறிப்பது **சோடிகா** முத்திரையாம் எ-று. (18)

## பதாகைமுத்திரை.

‡ ஓரித்திடுகர முறநிமிர்த் தங்குலி
பாரித் திணைவது பதாகைமுத் திரையே.

இ-ள்:- ஐந்து விரல்களையும் சேர்த்து நீட்டுவது **பதாகை** முத்திரையாம் . எ-று. (19)

## சங்கமுத்திரை

தூய பதாகைச் சொற்பெரு விரனுதி
ஆயதர்ச் சனிவலத் தடிதொடிற் சங்கம்

இ-ள்:- பெருவிரல் நுனி சுட்டு விரலடியிற் பொருந்த

---

‡ *"சுத்தியதரந்துடைத்தல் பதாகையெனச் சொல்வர்"*

வளைத்து ஏனைய விரல்களையுஞ் சற்றுவளைப்பது **சங்கமுத்திரையாம்** எ-று * (20)

### காளகர்ணிகை முத்திரை

**உறுமிரு கைவிர லுள்ளுறக் குவித்துச்**
**சிறுவிரல் முதலாய்ச் செறிந்தநால் விரலினுந்**
**துன்னிரு பெருவிரல் தொட்டுற நிமிர்த்திடிற்**
**கைந்திகழ் காளகர்ணிகை முத்திரையே.**

இ-ள்:- இரு கரங்களையும் இணைத்து விரல்களைச் சேர்த்துச் சிறிது வளைத்துப் பெருவிரல்களால் சிறுவிரலடிமுதல் சுட்டு விரல் நடுவரையுந் தொடுவது **காளகர்ணிகை** முத்திரையாம். (21)

### இலிங்க முத்திரை

**அடுத்திடு மிடக்கையி லங்குட் டந்தனைப்**
**பிடித்திடு வலக்கைப் பெருவிர னிமிர்த்தாங்**
**கசைவற விடக்கையி லங்குலி களைவளைத்**
**திசைவுறப் பிடித்திடி னிலிங்கமுத் திரையே.**

இ-ள்:- இடக்கைப் பெருவிரலை நிமிர்த்தி அதை வலக்கைப் பெருவிரலால் வளைத்துப் பிடித்து இடக்கை விரல்களை மடக்கி வலக்கையிலுள்ள ஏனைய விரல்களை ஒருசேர நீட்டுவது **இலிங்க** முத்திரையாம் எ-று. (22)

### மனோரத முத்திரை

**இருகையங் குலிகளை யெதிர்முகத் துள்ளுறச்**
**செருகிய பின்னிணைச் செங்கைகள் கூட்டி**
**நீட்டுதர்ச் சனிக ணிமிர்த்துறப் பெருவிரன்**
**முட்டிடின் மனோரத முத்திரை யாகும்.**

இ-ள்:- இரு கரங்களையுங் கூட்டி இருகை விரல்களையும்

---

* *இதனால் தர்ப்பணம் செய்யும்போது அங்கையிலிருந்து விரல் நுனிகளால் ஜலத்தை விடவேண்டும், இது தேவதீர்த்தமெனப் பெயர் பெறும்.*

எதிர் முகமாகச் செருகிச் சுட்டுவிரல்களை நீட்டி இணைத்து அவைகளின்மேல் பெருவிரல்களை நீட்டிவைப்பது **மனோரத** முத்திரையாம் எ-று. (23)

## பஞ்சமுகமுத்திரை.

**தன்னினுட் கோத்தகைத் தர்ச்சனி பெருவிரன்**
**மன்னிய நடுவிரன் மணிச்சிறு விரல்களை**
**யாங்குறப் பிடித்தபின் னணிவிர லிணைநடுப்**
**பாங்குற நிமிர்ப்பது பஞ்ச முகமே.**

**இ-ள்:-** இருகைவிரல்களையும் எதிர்முகமாக உள்ளுறச் செருகிச் சுட்டுவிரல்களால் நடுவிரல்களையும், பெருவிரல்களாற் சிறுவிரல்களையும் பிடித்து அணிவிரல்களைச் சேர்த்து நடுவில் நீட்டுவது **பஞ்சமுகமாம்** எ-று. (24)

## திரிசூல முத்திரை.

**பெருவிரல் கோத்தபின் பெருவிர னடுவிரல்**
**சிறுவிரல் நிமிர்ப்பது திரிசூல முத்திரையே.**

**இ-ள்:** இருகரங்களையுஞ் சேர்த்து விரல்களைக் கோத்த பின் பெருவிரல்களையும் நடுவிரல்களையும் சிறுவிரல்களையும் இணைத்து நீட்டுவது **திரிசூலமாம்** எ-று. (25)

## மகரமுத்திரை.

**திரிசூ லந்தனிற் சேர்ந்த தர்ச் சனிதனை**
**மருவனு மிகையுற வளைத்திடின் மகரம்.**

**இ-ள்:** திரிசூல முத்திரையிற் சேர்ந்துள்ள சுட்டுவிரல்களை நீட்டி வலச்சுட்டு விரலால் இட அணிவிரலையும் இடச் சுட்டுவிரலால் வலஅணிவிரலையும் வளைத்துப் பிடிப்பது **மகர** முத்திரையாகும் எ-று. (26)

## சிருக்குமுத்திரை.

**காண்டகு மகரக் கனிட்டையுள் வளைத்ததைத்**
**தீண்டிடிற் பெருவிரல் சிருக்குமுத் திரையே.**

இ-ள்:- மகரமுத்திரையிற் பொருந்திய சிறுவிரல்களிரண்டையும் உள்ளேவளைத்து நடுவிரலிற்றங்கும்படி நீட்டிப், பெருவிரல்கள் அச்சிறு விரல்களைத் தீண்டின் **சிருக்குமுத்திரை** யாகும் எ-று. (27)

### நாராசமுத்திரை.

இருகைமுட் டியினிமிர்த் திட்டதர்ச் சனிகளிற்
செருகிய பெருவிரற் றெறிக்கி ஞராசம்.

இ-ள்:- இரண்டு கரமுட்டியினின்றும் நீட்டிய சுட்டுவிரல்களில் பெருவிரல்களைச் செருகித் தெறிப்பது **நாராசமுத்திரை** யாம் எ-று. இது சிவபூசையில் வருவது.

இரு கரங்களையும் முட்டியாகப் பிடித்துச் சுட்டுவிரல்களை நீட்டிக் கழுத்தின் இருபுறங்களிலிருந்து மார்பின் மத்திவரை கொண்டுவருவது மற்றொருவகை நாராசம். இது அங்கநியாசத்தில் வருவது. (28)

### திவ்வியமுத்திரை

*அம்மலர் சாத்தற் கநாமிகை பெருவிரல்
செம்மையிற் செறிப்பது திவ்விய முத்திரை

இ-ள்:- புஷ்பஞ் சாத்தும் பொருட்டுப் பெருவிரலையும் அணிவிரலையுஞ் சேர்த்து மற்றைய விரல்களை நீட்டுவது **திவ்விய** முத்திரையாம் எ-று. (29)

### உற்பவமுத்திரை.

சிறுவிர னீட்டிச் சிறந்ததர்ச் சனியுடன்
உறுபெரு விரல்தொடி னுற்பவ முத்திரை.

இ-ள்:- சிறுவிரலை நீட்டிச் சுட்டுவிரலைப் பெருவிரல் தொடுவது **உற்பவ**முத்திரை எ-று. (30)

### தியாகமுத்திரை.

அருந்த லளித்த லாகுதி யோம்ப
றிருந்திய விரல்குவி தியாகமுத் திரையே.

---

* "இலங்குமிடந் தொடுதற்குச் சேட்டைய நாமிகையை யிணைந்திடுதல் திவ்விய முத்திரை யென்பதாமே"

இ-ள்:- விரல்களை நுனிகள் பொருந்தச் சேர்த்துக் குவியச் செய்வது **தியாக**முத்திரை எ-று. இது போசனத்திலும் கொடுத்தலிலும் ஆகுதி செய்வதிலும் வருவதாம். **(31)**

## நிரீக்ஷண முத்திரை.

**பெருவிர லநாமிகை பிடித்ததி னடுவாற்**
**பரனது நோக்காய்ப் பார்த்த னிரீக்கணம்.**

இ-ள்:- பெருவிரலால் அணிவிரலை வளைத்துப்பிடித்து ஏனையவிரல்களை நீட்டிச் சிவனது நோக்கமாய்ப் பார்த்தல் **நிரீக்ஷண**மாம் எ-று **(32)**

## புரோக்ஷண முத்திரை.

**நிரீக்கணஞ் செய்தபி னிகழ்பதா கையினுற்**
**புரோக்கணஞ் செய்வது புரோக்கண முத்திரை.**

இ-ள்:- நிரீட்சணஞ் செய்தபின் பதாகை முத்திரையினுற் புரோக்ஷணஞ் செய்வது புரோக்ஷண முத்திரையாம் எ-று **(33)**

## தாடன முத்திரை

**தர்ச்சனி யதனுற் ருடனஞ் செய்வது**
**பொற்புறு தாடனம் புகலுமுத் திரையே**

இ-ள்:- சுட்டுவிரலினுற் றட்டுவது **தாடனம்** என்னும் முத்திரையாம் எ-று. **(34)**

## அப்யுக்ஷண முத்திரை

**அதோமுக மாகப் பதாகைமுத் திரையா**
**லப்பியுக் கணஞ்செய்வ தப்பெயர் முத்திரை.**

இ-ள்:- கவிழ்த்த பதாகை முத்திரையால் மூடுதல் **அப்பியுக்ஷணம்** என்னும் முத்திரையாம் எ-று. **(35)**

## தாளத்திரயம்.

**இலங்குற முக்கா லிடக்கையில் வலக்கைத்**
**தலங்கொடு தட்டுத ருளத் திரயம்.**

இ-ள்:- வலக்கைப் பெருவிரலொழிந்த மற்றைவிரல்களால் இடக்கையில் மூன்றுதரம் தட்டுவது தாளத்திரயமாம். எ-று. (36)

## நேத்திரமுத்திரை.

**சேட்டை கனிட்டைமேற் சேரமூ விரலையும்**
**நீட்டி விரிப்பது நேத்திர முத்திரை.**

இ-ள்: சிறு விரலைப் பெருவிரலால் வளைத்துப்பிடித்து நடுவிரல் மூன்றையும் நீட்டி விரிப்பது **நேத்திர**முத்திரையாம் எ-று. (37)

## பரிகமுத்திரை-

**தகைபெற முட்டியிற் றர்ச்சனி நிமிர்த்துப்**
**பகர்வலஞ் சுற்றுதல் பரிகமுத் திரையே.**

இ-ள்:- வலக்கையை முட்டியாகப் பிடித்துச் சுட்டுவிரலை நீட்டி இதனுல் வலமாகச் சுற்றுவது **பரிக** முத்திரையாம் எ-று. (38)

## மிருகமுத்திரை.

**கைவிரல் குவித்ததிற் கனிட்டைதர்ச் சனியெனும்**
**மெய்விர னீட்டிடின் மிருகமுத் திரையே.**

இ-ள்:- வலக்கை விரல்களைக் குவித்து அவைகளில் சிறு விரலையுஞ் சுட்டுவிரலையும் நீட்டி, மற்றைய விரல்களின் நுனிகளைச் சேர்ப்பின் **மிருக**முத்திரையாம் எ-று

இது பாத்தியாசமனுர்க்கியங்களைக் கொடுத்தலினும் காமிய கர்ம ஓமத்திலும் உபயோகிக்கப்படுவதாம். திலாதிகளும் நெய்யும் மிருகமுத்திரையினுல் ஓமஞ் செய்தல் வேண்டுமென்று அசிதாகமம் கூறும். (39)

## ஹம்சமுத்திரை.

சுட்டு விரலையும் நடுவிரலையும் பெருவிரலையுஞ் சேர்த்துப் பிடிப்பது **ஹம்ச** முத்திரையாம். இது சாந்தி கரும ஓமத்தில் உபயோகிக்கப்படுவதாம். சமித்துக்களை ஹம்ச முத்திரை

யினல் ஓமம் செய்தல் வேண்டுமென்று அசிதாகமம் கூறும். (40)

### சூகரீமுத்திரை.

எல்லா அங்குலிகளையும் சேர்த்துப் பிடிப்பது **சூகரீ** முத்திரை யெனப்படும். சருஹோமத்தைச் சூகரீ முத்திரை யினுற் செய்தல் வேண்டுமென அறிக. (41)

### கோமுகமுத்திரை.

அணிவிரல் நடுவிரல் சுட்டுவிரலாகிய நடுவிரல் மூன்றை யுஞ் சேர்த்துச் சிறிது வளைத்து மற்றைய விரல்களை நீட்டு தல் **கோமுக** முத்திரை எனப்படும். இதனுற் புரோக்ஷணம் செய்யத்தக்கதாம். ''நவம்பெறு மனுமிகைசேர் மத்திமை தற் சனியு நடுவளைத்தல் கோமுகமாம் புரோட்சணமற்றதனுல்'' என அநுட்டான முத்திரை விருத்தம் கூறும். (42)

### நிரோதனமுத்திரை.

சிறுவிரலை நீட்டி ஏனைய விரல்களின் நுனிகளைச் சேர்ப் பது **நிரோதன** முத்திரையாம். இது விபூதி குழைக்க ஜலம் விடுதற்காகும். (43)

### சின்மயமுத்திரை.

சுட்டுவிரல் நுனியையும் பெருவிரல் நுனியையுஞ் சேர்த்து மற்றைய விரல்களை நீட்டுவது **சின்மய** முத்திரை எனப்படும். (44)

### யோகமுத்திரை.

நடுவிரல் நுனியையும் பெருவிரல் நுனியையும் சேர்த்து மற்றைய விரல்களை நீட்டுதல் **யோக**முத்திரை எனப்படும். (45)

### பஸ்மமுத்திரை

கைகளையுயர்த்தி மத்திமை தர்ச்சனி அநாமிகை என்னும் விரல்களால் திரிபுண்டரம் தரித்தல் **பஸ்மமுத்திரை** எனப் படும். (46)

## திருமுத்திரை

இருகரமு மிணைந்து பெருவிரலொழிந்த ஏனைய விரல்களினிறைச் சந்தியால் நீர்விடுவது **திருமுத்திரை** எனப்படும். இவ்வாறு விடப்படும் நீர் ஆரிட தீர்த்தமாம். (47)

## சபாமுத்திரை.

இருகரங்களையும் இணைத்துக் கனிட்டை விரல்களால் நீர்விடுவது **சபா** முத்திரையாம். இவ்வாறு தருப்பிக்கும் நீர் மானவ தீர்த்தமாம். (48)

## பணுமுத்திரை.

இருகைகளையும் இணைத்துப் பெருவிரலொழிந்தமற்றை விரல்களைச் சிறிது வளைத்து அரவின் படம்போல அமைப்பது பணுமுத்திரையாம். இவ்வாறமைந்த கைகளிலிருந்து நீரை மணிக்கட்டு வழியாகவிடுவது பூததீர்த்தமெனப் பெயர்பெறும். (49)

## கண்டி முத்திரை.

விரல்களைமடக்கி நீண்ட அங்குட்டநுனியால் நீரைக் கொடுத்தல் **கண்டி** முத்திரையாம். இது பிதிர் தீர்த்தமெனப்படும். (50)

## வியாபகாஞ்சலிமுத்திரை.

இடக்கரத்தின் உட்புறத்தில் வலக்கரத்தின் பின்புறத்தைச் சேர்த்து விரல்களையும், விரல்களையும் ஒன்ருகச் சுட்டிச் சிறிது மேலே வளைத்தால் அது **வியாபகாஞ்சலி** முத்திரை எனப்படும். (51)

## பரிகைமுத்திரை.

**கைவல முதலிடக் கனிட்டை மூக்குந்தி**
**எய்தவப் பெருவிர லெதிர்தொடல் பரிகை.**

**இ-ள்:-** வலப்பெருவிரல் மூக்கினைத் தொட, இடச் சிறு

விரல் நாபியைத் தொட, இடப்பெருவிரலை வலச்சிறுவிரல் பொருந்தியிருப்பது பரிகை முத்திரையாம் எ-று.

> **தொடவலக்கை யங்குட்டந் துண்டங் கனிட்டை**
> **தொடவிடக்கை யங்குட்டத் தோடு**
> **வைக்ககனிட் டாக்கிரத்தை நாபியிலூண் மாசுதனைக்**
> **கைக்கும் பரிகையாங் காண்.**

எனச் சைவசமய நெறி கூறுவது காண்க. (52)

அங்குலி - விரல்; அங்குஷ்டம் - பெருவிரல்; தர்ச்சனி - சுட்டுவிரல்; மத்திமை - நடுவிரல்; அநாமிகை - அணிவிரல், மோதிரவிரல்; கனிட்டை - சிறுவிரல்.

முத்திராலட்சணம் முற்றிற்று.

**திருச்சிற்றம்பலம்.**



---

மக்கள் போற்றி வரவேற்பார்களென்பது திண்ணம். குருகுலத்தில் முதலாம் ஆண்டில் சேர்வதற்குத் தகுதியுள்ள மாணவர்களைச் சேர்த்துக் கல்வி கற்பிக்க வேண்டிய ஒழுங்குகள் செய்யப்பட்டுள்ளன. வடமொழியிலும் தென்மொழியிலும் ஆற்றல் நிறைந்த அதிபரும், தமிழுக்கும் வடமொழிக்குமென ஆற்றல் நிறைந்த வெவ்வேறு உபஅதிபர்களும், ஆசிரியர்களும் சிவானந்த குருகுலத்தில் வகுப்புக்களை ஒழுங்காக நடாத்தி வருகின்றனர்.

குருகுலத்தில் பயிலும் மாணவர்கள் முதல் மூன்று ஆண்டுகளில் வடமொழியிலும் தென்மொழியிலும் இலக்கணம் இலக்கியம், வேதம், ஆகமம், சமயபாடங்கள், திருமுறைகள், சாத்திரங்கள் என்பனவற்றைப் பொதுவாகவும் அடுத்த இரண்டாண்டுகளில் உயர்தர வகுப்புக்களில் மேலே குறிக்கப்பட்டவைகளுடன் சித்தாந்தசாத்திரங்கள், இந்துதத்துவ ஞானம், சகலவேதாகம கிரியைமுறைகள், மேல்நாட்டு விஞ்ஞான அறிவு என்பவைகளைச் சிறப்பாகவும் கற்கக்கூடிய விரிவான பாடவிதானம் வகுக்கப்பட்டுள்ளது.

சிவானந்த குருகுலக் கல்வி பண்டைய குரு சிஷ்ய முறைப்படி நடைபெறும். மாணவர்கள் சிஷ்ய முறையில் ஒழுகி தமது கல்வியில் ஆற்றலும் வளர்ச்சியும் பெறவும், தமது பிற்கால முயற்சியில் சிறப்புப் பெறவும், முயற்சிக்கேற்ற இலட்சியங்களைக் கடைப்பிடிக்கவும் ஊக்கமுடையராவர்; ஆசிரியர் குரு முறையில் மாணவர்களைத் தமது குழந்தைகள்போல வழிநடத்தி நல்லொழுக்க வாழ்வு அளித்துக் கல்வி போதிப்பர்.

"தொண்டர் நாள்தொறும் துதிசெய அருள்செய்
கேதீச்சர மதுதானே" (சம்பந்தர்.)

---



அச்சுவேலி சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள் அவர்கள் ஈழநாட்டிலுள்ள சிவாச்சாரியார்களுள் தலைசிறந்து விளங்குகின்றார்கள். இவர்களுக்கு வடமொழியிலும் தமிழிலுமுள்ள இலக்கிய இலக்கணநூல்களையும் சமய சாத்திரங்களையும் போதித்தவர்கள் நீர்வேலி ஸ்ரீமத் சிவப்பிரகாசபண்டிதர் அவர்களும், ஸ்ரீமத் கைலாசபிள்ளையவர்களும் சுன்னுகம் ஸ்ரீமத் குமாரசுவாமிப் புலவரவர்களுமாவர்.

1910-ம் ஆண்டில் இவர்களுக்கு ஆச்சாரியாபிஷேகம் செய்யப்பெற்றது. 1918-ம் ஆண்டில் அச்சுவேலியில் சரஸ்வதி வித்தியாலயம் என்னும் சைவப்பாடசாலையை இவர்கள் நிறுவினார்கள்.

இவர்கள் சிவலிங்கப் பிரதிஷ்டாவிதி, திரிபதார்த்த விவேகம், பிராசாத சட்சுலோகி முதலிய வடமொழி நூல்களையும், சிவபூசை விளக்கம், விநாயகபரத்துவம் மகோத்சவ சந்திரிகை, சைவப்பிரகாசிகை முதலிய தமிழ் நூல்களையும் வெளியிட்டுள்ளார்கள். 1960-ம் ஆண்டில் இவர்களுக்கு ஒரு பாராட்டுவிழா நிகழப்பெற்றது. திருக்கேதீச்சரத்தில் இப்பொழுது நிறுவப்பட்டுள்ள சிவானந்த குருகுலத்திற்கு இவர்கள் அதிபராய் விளங்குகின்றார்கள்.